Thanjavur Sarasvati Mahal Series No. : 491

# ॥ मल्लिकामारुतम् ॥

# MALLIKAMARUTAM

Editor :

Dr V. M. ANANTHANARAYANAN,
Guest Editor,
Sarasvati Mahal Library, Thanjavur.
Reader, Department of Sanskrit,
National College, Tiruchirapalli - 620 001.




THANJAVUR MAHARAJA SERFOJI'S
**SARASVATI MAHAL LIBRARY,**
THANJAVUR-613 009.

2006




Price : Rs. 250-00

## BIBLIOGRAPHICAL DATA


| | |
|---|---|
| Title of the book | : MALLIKAMARUTAM |
| Editor | : Dr V. M. Ananthanarayanan |
| Publisher | : Director,<br>Sarasvati Mahal Library,<br>Thanjavur - 613 009. |
| Publication No. | : 491 |
| Language | : Sanskrit |
| Edition | : First Edition |
| Date of Publication | : 2006 |
| Paper used | : 18.6 Kg. T. N. P. L. |
| Size of the book | : 21 x 14 c.m. |
| Printing Type used | : 16 point |
| Number of pages | : 500 |
| No. of copies | : 250 |
| Printer | : DTP<br>Sarasvati Mahal Library, Thanjavur. |
| Binding | : Wrapper Binding |
| Subject | : Drama |
| Classification | : Prakarana |
| Price | : Rs. 250 |

# வெளியீட்டாளர் முகவுரை

பண்டிட் ஜவகர்லால் நேரு அவர்கள் தனது "இந்தியாவைக் கண்டுகொண்டேன்" (Discovery of India) எனும் நூலில் இந்தியா சமூகம், பண்பாடு, இலக்கியம், ஓவியம், சிற்பம், கலை போன்றவற்றால் வேற்றுமையில் காணும் ஒற்றுமையை வியந்து பாராட்டுகிறார். இந்த வேற்றுமையில் காணும் ஒற்றுமைப் பண்பு நம் நூலகத்திற்கு மிகவும் பொருந்தும். இங்கு எல்லா மொழி ஓலைச்சுவடிகளும், காகிதச்சுவடிகளும் இடம் பெற்றுள்ளன. அந்தந்த துறை முறை போக்கிய வித்தகர்கள் அவற்றை ஆய்ந்து, ஓர்ந்து, உணர்ந்து பொருள் கூறி பதிப்பிக்கின்றனர்.

**மல்லிகா மாருதம்** எனும் இந்நூல் நமது தஞ்சாவூர் சரசுவதி மகால் நூலகத்தில் காணப்படும் சுவடிகளுள் மிக அரிதான கிரந்தச்சுவடி எண். டி. டி. 4542 (பர்னல் எண். 10674) மற்றும் தெலுங்குச் சுவடி எண். டி. டி. 4541 (பர்னல் எண். 10673) ஆகியவற்றை மூல நூலாகக் கொண்டு, சென்னை, கீழ்த்திசைச் சுவடிகள் காப்பகம், அடையார் நூல்நிலையம், மற்றும் ஆராய்ச்சி நிலையம், கேரளப் பல்கலைக்கழக கீழ்த்திசைச் சுவடிகள் ஆராய்ச்சி மையம், மைசூர் பல்கலைக்கழக கீழ்த்திசைச் சுவடிகள் ஆராய்ச்சி மையம் ஆகிய மையங்களிலுள்ள சுவடிகளையும் தேர்வு செய்து, மொத்தம் பதினாறு சுவடிகளை ஒப்பிட்டு, இந்தப் பதிப்பு வெளியிடப்பட்டுள்ளது.

சமஸ்கிருத காட்சிக் காவியங்கள் நாடகங்கள் என்ற பெயரால் அழைக்கப்பட்டாலும், அவை இலக்கிய வழியில் ரூபகங்கள் என்று வழங்கப்படுகின்றன. அவை நாடகம், பிரகரணம், பாணம், பிரஹஸனம், டிமம், வ்யாயோகம், ஸமவாகாரம், வீதி, அங்கம், ஈஹாம்ருகம் எனப் பத்து வகைப்படும். அவற்றுள் பிரகரணம் என்ற வகையைச் சார்ந்தது இம் மல்லிகாமாருதம் ஆகும். இந்நூலாசிரியர், தமிழ்நாட்டில் தொண்டைமண்டலத்தில், பாலாற்றின்

கரையிலமைந்துள்ள லாடபுரம் என்னும் ஊரில் பிறந்த உத்தண்டன் என்பவராகும். இவர் கேரளம் சென்று அரசன் மானவிக்கிரமனின் அரசவைப்புலவராக இருந்தார். மன்னவன் பணித்ததை ஏற்று மல்லிகா மாருதம் எனும் இந்நாடகத்தை எழுதியதாக இந்நாடக முன்னுரையில் கூறப்படுகிறது.

தமிழகத்தில் தோன்றிய ஸம்ஸ்க்ருதக் கவிஞர் கேரளத்தில் சென்று புகழடைந்த வரலாறு போற்றுதற்குரியது. உத்தண்டன் கோகிலசந்தேசம் என்னும் தூதுக்காவியத்தையும் இயற்றியுள்ளார். இவை தவிர, நடாங்குசம் என்ற கேரள மேடைக்கூத்தைப் பற்றிய கடுமையான விமர்சன நூலையும், ஸ்வாதீசாடு என்னும் தனது மனைவியைக் குறித்து எழுதிய கவிதைகளையும், பல தனிச்செய்யுட்களையும் இயற்றியுள்ளார் என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

இந்நூலை திருச்சி முனைவர் வ. ம. அனந்த நாராயணன் பதிப்பித்துள்ளார். இப்பதிப்பிற்கு பதினாறு சுவடிகளை ஒப்பிட்டு உரை கண்டிருப்பது பாராட்டிற்குரிய அரிய முயற்சியாகும். அன்னாருக்கு என் இனிய பாராட்டுக்கள்.

இந்நூல் வெளிவர நிதி உதவி நல்கிய நடுவண் அரசுக்கும், நிருவாக அலுவலர் மற்றும்வெளியீட்டு மேலாளர் (பொறுப்பு) திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும், இந்நூலை கணினி அச்சில் வெளிவரத் துணை நின்ற ஏனையோருக்கும் எனது இனிய பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**சா. விஜயராஜ் குமார்**, இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும்
இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

*தஞ்சாவூர்*
*17- 9 - 2006*

*****

# முன்னுரை

## *ஆசிரியர் குறிப்பு*

**மல்லிகாமாருதம்,** ஸம்ஸ்க்ருத இலக்கியத்தில் பிரகரணம் என்னும் நாடக வகையைச் சார்ந்தது. உத்தண்டன் என்பவர் இந்நூலாசிரியர். கி. பி. 15 ஆம் நூற்றாண்டில், கேரளத்தில் உள்ள கோழிக்கோடு நகரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்த மானவிக்கிரமனின் அவைப்புலவர்.

மன்னர் மானவிக்கிரமனின் அவையில் பதினெட்டரைக் கவிகள் என்றழைக்கப்பட்ட கவிஞர்கள் அவைப்புலவர்களாக இருந்தனர். இவர்களுள் அரைக்கவி, மலையாள மொழி மட்டுமே அறிந்த பூனம் நம்பூதிரி என்பார். ஸம்ஸ்க்ருதம் மலையாளம் இவையிரண்டும் அறிந்திருந்தால் மட்டுமே முழுக்கவியாவார்கள். பய்யூர் பட்டர்கள் குடும்பத்தைச் சார்ந்த **ஒன்பது** பேர், திருவேகப்புரா என்னும் ஊரைச்சேர்ந்த **ஐந்து** நம்பூதிரிகள், முல்லப்பள்ளி பட்டத்திரி, சேன்னாஸ் நாராயணன் நம்பூதிரி, உத்தண்டன், காகசேரி பட்டத்திரி ஆகியோர் மற்ற கவிகள் ஆவர்.

தமிழ்நாட்டில் தொண்டைமண்டலத்தில், பாலாற்றின் கரையிலமைந்துள்ள லாடபுரம் எந்னும் ஊரில் பிரந்தவர் உத்தண்டன். இது அவரது இயற்பெயரா, புனைப்பெயரா அல்லது காரணப்பெயரா என விளங்கவில்லை. மூன்றுமே பொருந்துவதுபோல இவரது பெயர் அமைந்துள்ளது. இவரது தந்தை ரங்கநாதன், தாய் ரங்கதேவி. ஒவ்வொரு அங்கத்தின் கடைசியில் கொடுக்கப்படும் செய்யுளில் 'ரங்கநாதனும், ரங்கதேவியும் உத்தண்டனை மகனாகப்பெற்றனர்' என்ற செய்தி காணப்படுகிறது. மற்ற கவிகளை விமர்சிப்பதில்

கடுமையாக விளங்கினார் என்பது அவரால் எழுதப் பட்டதாகச் சொல்லப்படும் 'முக்தகம்' அல்லது தனிச் செய்யுள்களின் வாயிலாகத் தெரிகிறது. உத்தண்டன் ஆந்திரம், கலிங்கம், கர்நாடகம் முதலான நாடுகளில் பற்பல இடங்களைக்கண்டு, புனித நதிகளில் நீராடிவிட்டுக் கடைசியாகக் கேரளம் போய்ச் சேர்ந்தார். அங்கு பதினெட்டுக் கவிஞர்களுள் ஒருவரான சேன்னாஸ் நாராயண்ன் நமபூதிரி என்பார் இவரை அரசன் மானவிக்கிரமனுக்கு அறிமுகம் செய்து வைத்தார். அரசனும் இவரது புலமையில் மனம் பறிகொடுத்தவராக, மல்லிகாமாருதம் என்னும் நாடகத்தை எழுதுமாறு பணித்தார், என்று இந்த நாடகத்தின் முன்னுரையில் ஸூத்ரதாரன் கூறுகிறான்.

கேரளத்தைச் சேர்ந்தவர்கள் நாடு முழுவதிலும் பரவிப் புகழடைந்தது புதிதல்ல. தமிழகத்தில் தோன்றிய ஸம்ஸ்க்ருதக் கவிஞர் கேரளத்தில் சென்று புகழடைந்த வரலாறு இது ஒன்றுதான். உத்தண்டன் கோகிலசந்தேசம் என்னும் தூதுக்காவியத்தை இயற்றியுள்ளான். இவை தவிர, நடாங்குசம் என்ற கேரள மேடைக்கூத்தைப் பற்றிய கடுமையான விமர்சன நூலையும், ஸ்வாதீசாடு என்னும் தனது மனைவியைக் குறித்து எழுதிய கவிதைகளையும், பல தனிச்செய்யுட்களையும் இயற்றியுள்ளார் என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

மானவிக்கிரமனின் அவையில் கவிஞர்களுக்குச் சிம்ம சொப்பனமாக விளங்கிய உத்தண்டனை வெல்வதற்கு, கருவிலிருந்தே கவித்துவம் பெற, அதற்கான மருந்து களையும், மந்திரங்களையும் ஒரு அன்னைக்குக்கொடுத்து, அதனால் பிறந்த குழந்தையாகிய காகசேரிபட்டத்திரியைக் கொண்டு உத்தண்டனை வென்றனர் என்று கேரள இலக்கிய வரலாறு கூறுகிறது. இதற்கு அரசன் மானவிக்கிரமன் மிகுந்த ஊக்கமளித்தான் எனவும் காணப்படுகிறது. தமது

வாழ்நாளின் கடைசிப்பகுதியைக் கழிக்க, அமைதியான தொண்டை மண்டலத்துக்கு வந்து ஒரு கிராமத்தின் அதிகாரியாகப் பொறுப்பேற்று இருந்த காலத்தில், உத்தண்டன் மீண்டும் இதே காகசேரி பட்டத்திரியைச் சந்திக்க நேருகிறது. நில சம்பந்தமான ஒரு வழக்கில், நேரில் கண்ட சாட்சியாக காகசேரி பட்டத்திரி வந்து, தான் கேட்டவற்றை தமிழ்மொழி அறியாதபோதும், தமிழில் உள்ளதை உள்ளபடி உரைத்ததாக ஒரு நிகழ்ச்சி குறிப்பிடப்படுகிறது. தான் கேரளத்தை விட்டு வெளியேறக் காரணமானவரின் சொல்லுக்கு மரியாதை அளித்து, உத்தண்டன் அதன்படி தீர்ப்பளித்தான் என்ற செய்தி காணப்படுகிறது. என்னே தமிழன் மாண்பு!

## நூற்குறிப்பு

ஸம்ஸ்க்ருத த்ருச்ய காவியங்கள் நாடகங்கள் என்ற பெயரால் அழைக்கப்பட்டாலும், அவை இலக்கிய ரீதியில் ரூபகங்கள் என்று வழங்கப்படுகின்றன. அவை நாடகம், பிரகரணம், பாணம், பிரஹஸனம், டிமம், வ்யாயோகம், ஸமவாகாரம், வீதி, அங்கம் ஈஹாம்ருகம் எனப் பத்து வகைப்படும். அவற்றுள் பிரகரணம் என்ற வகையைச் சார்ந்தது இந்த மல்லிகாமாருதம்.

இதில் நாயகன் தீரசாந்தன் (அமைச்சர் மகன்). கதைக்கரு கவிஞரின் கற்பனை. காதற்சுவை. நாயகனுக்கு ஏற்றவாறு நாயிகையும் அமைச்சர் மகள். ஆசிரியரின் கதை பவபூதி இயற்றிய மாலதீமாதவம் என்னும் பிரகரணத்தை ஒட்டியே அமைந்துள்ளது. ஆசிரியர் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர். அதிலும் காஞ்சிக்கு அருகாமையிலுள்ள லாடபுரத்தைச் சேர்ந்தவர் என்பதால் அங்கு அருள்புரியும் காமாக்ஷீ தேவியையும் கதையின் போக்குக்கு உதவுவதாகக் காண்பிக்கிறார். கேரளத்தைச் சென்றடைந்தவர் என்பதால் கேரளத்தின் இயற்கை எழில்களைக் கதைக்கேற்றவாறு

பொருத்தி, வருணித்துள்ளார். ஆனால் அவற்றில் கேரளத்தைக் குறிப்பிடவில்லை, என்பது குறிப்பிடத்தக்கது. 10 அங்கங்களில் மல்லிகாவுக்கும் மாருதனுக்கும் ஏற்பட்ட காதல், தடைகளை மீறி எவ்வாறு திருமணத்தில் முடிகிறது என்று காட்டியுள்ளார்.

நமது தஞ்சாவூர் சரசுவதி மஹால் நூலகத்தில் காணப்படும் சுவடிகளுள் மிக அரிதான கிரந்தச் சுவடி எண் TD 4542 (பர்னல் எண். 10674) மற்றும் தெலுங்குச் சுவடி எண் TD 4541 (பர்னல் எண். 10673) ஆகியவற்றை மூல நூலாகக்கொண்டு, தென்னகத்தில் கர்நாடகம், கேரளம் ஆகிய மாநிலங்களில் உள்ள சுவடிகளையும் சென்னைச் சுவடிகள் காப்பகத்திலுள்ள சுவடிகளையும், அடையார் சுவடிகள் காப்பகத்திலுள்ள சுவடிகளையும் தேர்வு செய்து, மொத்தம் பதினாறு சுவடிகளை ஒப்பிட்டு, இந்தப் பதிப்பு வெளியிடப் பட்டுள்ளது.

சிறந்த வடமொழி ஆளுமையையும், ஆறுவிதமான பிராகிருதங்களை பாத்திரப்படைப்புக்கு ஏற்றவாறு பயன்படுத்தியுள்ள தன்மையும் நூலாசிரியரின் அறிவாற்றலைக் காட்டுகிறது.

## நன்றியுரை

இந்த நூலைப் பதிப்பிக்க அனுமதியளித்த தஞ்சாவூர் சரசுவதி மகால் நூலகத்தின் இயக்குநரும் மாவட்ட ஆட்சித் தலைவருமான உயர்திரு சா. விஜயராஜ் குமார், இ, ஆ, ப., அவர்களுக்கு எனது முதற்கண் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கல்விப்பணியில் எப்பொழுதும் ஈடுபடவேண்டும் என்ற சீரிய கொள்கையுடைய எமது திருச்சிராப்பள்ளி தேசிய கல்லூரியின் வித்யா சேவா ரத்னம் திரு கே. சந்தானம்

அவர்களுக்கும், நிர்வாகக்குழு உறுப்பினர்களுக்கும், செயலர் திரு. K. இரகுநாதன் அவர்களுக்கும், முதல்வர் முனைவர் கு. அன்பரசு அவர்களுக்கும், இந்நூலைக் கேண்மைப் பதிப்பாசிரியராக இருந்து வெளியிட அனுமதி அளித்ததற்காக எனது உளம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

நான் தொய்வுற்ற போதெல்லாம், ஊக்கமும் உற்சாகமும் வழங்கி, நூலைச் செம்மையாக வெளிக்கொணர வைத்த நூலகத்தின் நிர்வாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் உயர்திரு சாமி. சிவஞானம் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

எனது ஆசானும் சென்னைப் பல்கலைக்கழகத்தின் ஓய்வுபெற்ற ஸம்ஸ்க்ருதத் துறைத் தலைவருமான முனைவர் நா. வீழிநாதன், D. Litt., அவர்கள் எனது ஐயப்பாடுகளை நீக்கி, இந்நூல் நல்ல முறையில் வெளிவர உதவியுள்ளார். அவர்களுக்கு எனது நன்றி.

இந்நூலில் காணப்படும் பிராகிருதச் சொற்களைச் சரியாகப் புரிந்துகொள்ள, எனக்குப் பிராகிருத இலக்கணம் கற்றுத் தந்த ஆசிரியர், சென்னை ஸம்ஸ்க்ருதக் கல்லூரியின் ஓய்வு பெற்ற பேராசிரியர் முனைவர் விஸ்வநாத ச்மா அவர்களுக்கு எனது நன்றி உரித்தாகுக.

நமது நூலகத்தில் பணி புரியும் திருமதி இராஜலட்சுமி அவர்கள் சுவடிகளைச் சரியாகப் புரிந்துகொள்ள உதவினார். அவருக்கு எனது நன்றி. நமது நூலகத்தில் இந்த நூலை அச்சிட்டு வெளியிடுவதில் ஈடுபட்டிருக்கும் அனைத்து அலுவலர்களுக்கும் எனது உளமார்ந்த நன்றியினை உரித்தாக்குகிறேன்.

இந்த நூலைச் செம்மையாக்க, தங்கள் நூலகங்களில் இருந்து சுவடிகளை அளித்து ஒப்பிட்டுநோக்க அனுமதி அளித்த

1. சென்னை, கீழ்த்திசைச் சுவடிகள் காப்பகத்தாருக்கும்,
2. அடையார் நூல்நிலையம் மற்றும் ஆராய்ச்சி நிலையத்தாருக்கும்,
3. கேரளப் பல்கலைக்கழக கீழ்த்திசைச் சுவடிகள் ஆராய்ச்சி மையத்திற்கும்,
4. மைசூர் பல்கலைக்கழக கீழ்திசைச் சுவடிகள் ஆராய்ச்சி மையத்திற்கும்,
5. மைசூர் மஹாராஜா கல்லூரியின் நிர்வாகத்தினருக்கும்

எனது நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

திருச்சி-1 முனைவர் **வ. ம. அனந்தநாராயணன்**



# கதைச்சுருக்கம்

## முதல் அங்கம்

பிரஸ்தாவனா என்றழைக்கப்படும் நாடகத்தின் அறிமுகக்காட்சியில் வாழ்த்துப்பாக்கள் இசைக்கப் படுகின்றன. பின்னர் சூத்திரதாரன் என்னும் நாடக இயக்குநர் நாடகத்தைப் பற்றியும், அதன் ஆசிரியர், நாடகம், அரங்கேற்றப்படும் இடம், நாடக ஆசிரியரின் புரவலர், அரசன் மானவிக்ரமன் பற்றியும் கூறுகிறார்.

நாடகம் துவங்குகிறது.

மிச்ரவிஷகம்பகம் என்னும் இடைப்பட்ட காட்சியில் மந்தாகினீ என்னும் பெண்துறவி, தனது மாணவியான ஸாரஸிகாவிடம், மாருதனையும் மல்லிகாவையும் திருமணத்தால் இணைக்கும் திட்டம் பற்றிக் கூறுகிறாள். மாருதனும், மல்லிகாவும் இவ்வுலகில் பிறந்த காரணத்தை அவனிடம் கூறி, மன்னன் ஸிம்ஹவர்மனின் அமைச்சர் சம்பரகன் மல்லிகாவை அடைய விரும்பி, அவளை அடைவதற்கான ஏற்பாடு களில் இறங்கியுள்ளதாகவும் கூறுகிறாள்.

முதல் அங்கம் துவங்குகிறது. நாடகத்தலைவன் மாருதன் காதல் வயப்பட்ட நிலையில் காட்டப் படுகிறான். தனிமையில் அவன், மல்லிகாவின் அழகை வருணிக்கிறான். அப்போது அவனது உயிர் நண்பன் கலகண்டன் அங்கு வருகிறான் அவனும், தான், அமைச்சர் விஷ்ணுராதனின் இல்லத்தருகே கண்ட பெண்ணைப்பற்றி வருணித்தவாறே வருகிறான். அவனைக்கண்ட மாருதன், தான் சந்தித்த பெண்ணைப் பற்றிக் கூறுகிறான். மந்தாகினி தனது ஆசிரமத்தில்,

அவளிடத்தில் தன்னை அமைச்சர் பிரம்மதத்தனின் மகன் என அறிமுகம் செய்து வைத்ததாகக் கூறுகிறான். ஆனால் அவளது பெயரை அறிந்துகொள்ள முடிய வில்லை என்று உரைக்கிறான்.

இவ்வாறு மாருதனும் கலகண்டனும் பேசிக் கொண்டிருக்கும்போது, மந்தாகினியின் மாணவி காளிந்தீ என்பாள் ஒரு மாலையை அவனிடம் அளித்து, அதனை மல்லிகா அவனுக்கு அனுப்பியதாகக் கூறுகிறாள். அவளிடமிருந்து மல்லிகா, அரசன் சந்திரவர்மனின் அமைச்சனான விசுவாவசுவின் வளர்ப்பு மகள் என்று அறிகிறான். மாலையை பெற்றுக்கொண்ட மாருதன், மல்லிகாவுக்கு தனது கழுத்து ஆரத்தைக் கழற்றிக் கொடுத்து அனுப்புகிறான். இருப்பினும், மல்லிகா அவனை விரும்புகிறாளா என்பதை அவனால் அறியமுடியவில்லை.

மதியநேரம் அறிவிக்கப்படுகிறது. மாருதன் தனது மதியநேரக் கடமைகளை முடிக்கப் புறப்படுகிறான். அப்போது பிரமரகன் என்ற மாருதனின் நண்பன், அரசன் அனுப்பியதாகக் கூறி ஒரு ஓவியத்துடன் மாருதனைக் காண வருகிறான். கலகண்டன் அவனிடம், மாருதனைக் குளியலறை அருகே சந்திக்கும்படி கூறுகிறான்.

### இரண்டாம் அங்கம்

பிரவேசகம் என்ற இடைப்பட்ட காட்சியில் மல்லிகாவின் இரு தோழிகள் பிரவாளிகாவும் கங்கேளிகாவும் காட்டப்படுகிறார்கள். அவர்கள் மல்லிகாவின் பிரிவாற்றாமையைப் பற்றிப் பேசிக் கொள்கிறார்கள். கங்கேளிகா பிரவாளிகாவிடம், அவளது (கங்கேளிகா) கணவன் பிரமரகன் வந்துவிட்டதாகத் தெரிவிக்கிறாள். மாருதனிடம்

ஓவியம் சென்றடைந்ததை அறிந்த இருவரும், மாருதன் அந்த ஓவியத்திலுள்ள பெண்ணை மிகவும் இரசிப்ப தாகப் பேசிக்கொள்கின்றனர். மாருதன் அப்பெண்ணின் மீது காதல் வயப்பட்டிருக்கலாம் என்றும் கூறுகின்றனர். மேலும், சிங்களத்திலிருந்து வந்திருந்த இரத்தினபதி என்னும் வணிகன், அரசன் சந்திரவர்மனுக்கு ஒரு துகிலை அன்பளிப்பாக வழங்கினான் என்றும், அதனை அரசன் மந்தாகினியிடம் வழங்கிவிட்டான் என்றும், அதனை மந்தாகினீ தற்போது தன் வாயிலாக மல்லிகாவிற்கு அனுப்பிவிட்டாள் என்றும் கங்கேளிகா கூறுகிறாள். சம்பரகனுக்கு மல்லிகாவிடம் உள்ள ஈடுபாடு குறித்தும், விசுவாவசு "மல்லிகாவின் திருமணத்தில் இறைவி காத்தியாயனியே முடிவெடுப்பாள்" என்று கூறிவிட்டாதாகவும் பேசிக் கொள்கின்றனர். 'மல்லிகா காளிந்தியை அழைக்கும் குரல் கேட்டவுடன் இருவரும் அவள் இருக்கும் இடத்திற்கு புறப்பட்டுச் செல்கின்றனர். இடைப்பட்ட காட்சி முடிவு பெறுகிறது.

முறையான இரண்டாவது அங்கத்தில், காளிந்தீ, நவமாலிகா என்ற இரு தோழிகளுடன் மல்லிகா அளவளாவிக்கொண்டிருக்கிறாள். மல்லிகாவினால் அனுப்பப்பட்ட மாலையை மாருதன் எவ்வாறு மனமுவந்து ஏற்றுக்கொண்டான் என்பதைக் காளிந்தீ விளக்குகிறாள். மாருதனால் அனுப்பிவைக்கப்பட்ட கழுத்தணியைத் தொட்ட மாத்திரத்தில், மல்லிகா மயிர்க்கூர்ச்செறிகிறாள். காளிந்தீயும் நவமாலிகாவும் மல்லிகாவைக் கேலி செய்யும்போது, ஸாரஸிகா (மந்தாகினியின் மாணவி) அவளைக்காண வந்து கொண்டிருப்பதாக, வாயிற்காப்பாள் அறிவிக்கிறாள்.

ஸாரஸிகா, மல்லிகாவைப்பார்க்க வரும்போதே, இனி நடக்கப்போகும் சம்பவங்களைப் பற்றி, மந்தாகினீ

தன்னிடம் கூறிவிட்டதாக உரைக்கிறாள். சந்திரவர்ம அரசன் மந்தாகினிக்கு அளித்த துகிலை, ஒரு தந்தப் பெட்டியில் வைத்து அளிக்கிறாள். மேலும், அரசனும் மந்தாகினீயும் அவளது திருமணம் குறித்து ஆலோசனை செய்து வருவதாகக் கூறுகிறாள். ஸாரஸிகா சென்ற பிறகு, பெட்டியைத் திறந்து பார்க்கும் மல்லிகா, அந்தத் துகிலைக் காண்கிறாள். அதில் வரையப்பட்டிருக்கும் ஓவியத்தைக் கண்டு, மாருதன் கந்தர்வ உலகத்தச் சேர்ந்தவன் என்பதை அறிந்து கொள்கிறாள். மாருதன் வேறொரு பெண்ணிடம் மனதைப்பறி கொடுத்திருப்பானோ என்னும் ஐயம் அவளிடம் ஏற்படுகிறது. “இது ஒரு தலைசிறந்த ஓவியனின் கற்பனையே. மாருதனை எங்ஙனம் ஒருவர் சிங்களத்தில் கண்டிருக்க முடியும்? காலையில் ஆசிரமத்தில் நிகழ்ந்த வற்றைத் தாங்களே கண்டீர்கள் அல்லவா?” என்று கேட்டு, அவளது ஐயத்தைத் அகற்றுகிறாள்.

பிறகு பிரமகன் (கங்கேளிகாவின் கணவன்) மல்லிகாவைக் காண வருகிறான். முன்னரே அரசன் சந்திரவர்மன் சிங்கள வியாபாரியால் கொண்டு வரப்பட்ட சூடாமணியையும், மல்லிகாவின் ஓவியம் வரையப்பட்ட துகிலையும் மாருதனுக்கு வழங்கிவிட்ட தாகவும் மாருதன் அத்துகிலில் காணப்பட்ட மல்லிகாவிடம் மனதைப் பறிகொடுத்துவிட்டான் என்றும் கூறுகிறான் பிரமகன். மல்லிகாவைப் பார்த்து அவளிடம் மாருதன் அளித்ததாக அந்தச் சூடாமணியை வழங்குகிறான். மாருதனுக்கு அளிக்கப்பட்டிருக்கும் துகிலில் வரைந்துள்ள ஓவியம், நிச்சயமாக மல்லிகாவுடையதுதான் என்று அவளுக்கு தைரியம் கூறுகிறான். காளிந்தீயோ அந்தச் சூடாமணியைக் கண்கொட்டாமல் பார்த்தபடி இருக்கிறாள்.

மாலை நெருங்கிவிட்டதை வந்திகள் அறிவிக்கின்றனர். பிரமகன் மல்லிகாவின் இல்லத்திலிருந்து வெளியேறுகிறான்.

**மூன்றாவது அங்கம்**

இடைப்பட்ட காட்சியில் (மிச்ரவிஷ்கம்பம்) மந்தாகினீயும் அவளது மாணவி ஸாரஸிகாவும் ஆலோசனையில் இருக்கிறார்கள்.

சம்பரகன், மல்லிகாவைத்தான் திருமணம் செய்துகொள்ளவேண்டும் என்று அரசன், விசுவாவசுவை வற்புறுத்தியவுடன், விசுவாவசு தன் மகளின் திருமணத்தைத் தீர்மானிக்கவேண்டியது இறைவி காத்யாயனீதான் என்று கூறிவிட்டார். இப்படிப்பட்ட அசையாத நம்பிக்கை வைத்துள்ள விசுவாவசுவிடம் சம்பரகன் ஏதாவது சூது செய்வான் என்று மந்தாகினீ நம்புகிறாள். உடனே காத்தயாயனீதேவியின் கோயிலுக்கு விரைகிறாள். அங்கு வழிபாட்டில் ஈடுபட்டிருக்கும் விசுவாவசுக்கு, தமால மரத்தின் மீது மறைந்து அமர்ந்திருந்து, யாரோ ஒருவர் அசரீரியைப்போல் பேசுவதைக் காண்கிறாள். அந்த அசரீரிக் குரல் சம்பரனுக்கு ஆதரவாக விசுவாவசுவிடம் "மல்லிகா சம்பரனுக்கே வழங்கப்பட வேண்டியவள்" என்று கூறுகிறது. ஸாரஸிகா இந்த நிகழ்ச்சியை பகிரங்கப்படுத்த விரும்பியதும், அவளைத் தடுத்து, காளிந்தியிடம் விவரத்தை கூறும்படி, பணிக்கிறாள். கலகண்டனை, சோமசரஸில் குளித்துக்கொண்டிருக்கும் சம்பரகனின் நண்பனாகிய விஷ்ணுராதனின் மகளாகிய ரமயந்திகாவைச் சந்திக்க அனுப்புகிறாள். மந்தாகினீயும் விசுவாவசுவைச் சந்தித்து நடந்த விவரங்களைக் கூறி, அவரைக் கவனமாக இருக்கும்படி கூற, புறப்பட்டுச் செல்கிறாள். இத்துடன் இடைப்பட்ட காட்சி நிறைவுறுகிறது.

மந்தாகினீ, காளிந்தீயின் மூலமாக மல்லிகா, மாருதனைச் சந்திக்க ஏற்பாடு செய்திருக்கிறாள். மாருதனும் பிரமகனும் மல்லிகாவின் வருகைக்காகக் காத்திருக்கின்றனர். பிரிவாற்றாமையால் வருந்தும் மாருதன், பிரமகனை சீலையில் வரைந்துள்ள மல்லிகாவின் ஓவியத்தைக் கொண்டுவருமாறு பணிக்கிறான். இதனிடையே காளிந்தீ முதலான தோழிகள் சூழ மல்லிகா அங்கு வந்து சேருகிறாள். நவமாலிகா, மல்லிகாவுக்கு நடந்து முடிந்த நிகழ்ச்சிகளை ஞாபகப்படுத்துபவள் போல, கொடி வீட்டில் மறைந்திருக்கும் மாருதனிடம் அவளது பிரிவாற்றாமையை விவரிக்கிறாள். தோழிகள் மல்லிகாவை, தோட்டத்தைச்சுற்றி அழைத்துச் சென்று, அங்கு படர்ந்திருக்கும் மல்லிகைக் கொடியிடம் அழைத்துச் செல்கின்றனர். அதனடியில்தான் சிறு குழந்தையாக அவள் விசுவாவசுவால் கண்டெடுக்கப் பட்டாள் என்று கூறுகின்றனர். மல்லிகா, அந்தக் கொடியை வணங்குகிறாள். மாருதன் ஆவலோடு நடப்பதைக் கண்காணித்துக்கொண்டு இருக்கும்போது, ஸாரஸிகா, காளிந்தியை அவளது கடமையைச் செய்யுமாறு திரைக்குப் பின்னால் இருந்து, நினைவூட்டுகிறாள். எலோரும் வெளியேறி ஒரு கொடிவீடு வழியாக உள்ளே நுழைகின்றனர். இதையறியாத மாருதன், அவர்கள் வெளியேறிவிட்டனர் என்றெண்ணி அங்குள்ள செடிகொடி மரங்களைக் கண்டு, புலம்பத் தொடங்குகிறான். பிரமரகன் மல்லிகாவின் ஓவியத்தைக் கொண்டுவருகிறான். அதனைக் கண்டு மகிழ்வுற்ற மாருதன், ஓவியத்திலுள்ள மல்லிகாவைப் புகழ்ந்தவுடன், அதனைக் கவனிக்கும் மல்லிகா மிக்க மகிழ்ச்சியடைகிறாள்.

ஓவியத்தில், செடிகளுக்கு நீரூற்றிக் களைத் திருக்கும் மல்லிகா, வரையப்பட்டிருக்கிறாள். மாருதன் அந்த ஓவிய மல்லிகாவுக்கு விசிறி வீசத்துவங்குகிறான். பிரமரகன் அது ஒரு ஓவியமே என்று நினைவூட்டுகிறான். மாருதன் பிரிவாற்றாமையைத் தாளாமல் மயங்கி விழுகிறான். மல்லிகா உடனே அங்கு சென்று, மாருதனை மடியில் கிடத்தியவாறு அவனை எழுப்ப முயற்சி செய்கிறாள். மாருதன் சுயநினைவை அடைகிறான். எல்லோரும் மகிழ்ச்சியுடன் இருக்கும் நேரம், மதம்கொண்ட யானைகள் இரண்டு, வசந்த வனத்தையும் சோமசரஸையும் நோக்கி விரைந்து வருகின்றன என்ற செய்தி காதில் ஒலிக்கிறது. வசந்தவனத்தை நோக்கி வரும் யானையை அடக்க மாருதன் விரைகின்றான். சோமசரஸைக் குறிவைத்துச் சென்ற யானை கலகண்டனால் அடக்கப்பட்டது என்ற செய்தி கேட்டு யாவரும் மகிழ்கின்றனர். தோழியருடன் மல்லிகா, ரமயந்திகாவைத் தேற்றுவதற்குச் செல்கிறாள்.

### நான்காவது அங்கம்

இடைப்பட்ட காட்சியாகிய பிரவேசகத்தில், சம்பரகனின் மாணாக்கனாகிய கலவிங்ககனால், மாருதனையும், கலகண்டனையும் கொல்ல அமர்த்தப் பட்ட வர்வரகன், ஸிம்ஹமுகன் ஆகிய இரு யானைப் பாகர்களும் தாங்கள் வந்த வேலை எவ்வாறு தோல்வியில் முடிந்தது என்று ஒருவருக்கொருவர் தெரிவித்துக் கொள்கின்றனர். அவர்கள், தங்களை அனுப்பிய சம்பரகனைப் புகழாமல் மாருதனின் வீரத்தைப் புகழ்ந்து கொண்டிருக்கின்றனர். மாருதன் வசந்தவனத்தை வந்தடைந்துவிட்டான் என்பதை அறிந்து, நடந்தவற்றை உரைக்க, கலவிங்ககனிடம் செல்கின்றனர். பிரவேசகம் நிறைவு பெறுகிறது.

காட்சி, மாருதனும் பிரமரகனும் யானைச் சம்பவத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருப்பதைக் காட்டு கிறது. பிரமகன், கலகண்டன் எவ்வாறு ரமயந்திகாவை யானையிடமிருந்து காப்பாற்றினான் என்பதை விவரிக்கிறான். அப்போது ஆந்திர நாட்டு அந்தண உருவில் தோன்றும் கலவிங்ககன், தன்னை, கங்கைக்குச் செல்லும் வழிப்போக்கனாகக் காட்டிக் கொண்டு மாருதன் இருக்கும் வழியாகச் செல்கிறான். ஏதோ ஒன்றைக் கண்டு பயந்தவனைப்போல நடிக்கும் அவன் உண்மையானவன் என நம்பி, மாருதனும் பிரமரகனும் ஏனிந்த அச்சம் என வினவுகின்றனர். அவனும், தான் குளிப்பதற்காக சோமசரஸ் சென்ற தாகவும், அங்கு ஒரு மதம் கொண்ட யானை அவனைத் துரத்தியதாகவும், அங்கிருந்த இளைஞன் ஒருவன், அவனைக் காப்பாற்றியதாகவும், பின்னர் அவன் அந்த யானையின் பிடியில் நசுங்கிச் செத்ததாகவும் கூறுகிறான்.

இறந்துபோன இளைஞனை கலகண்டனாகக் கற்பனை செய்துகொள்ளும் மாருதன் பலவாறாக அழுது புலம்புகிறான். தற்கொலைக்குத் துணிகிறான். வந்த வேலை இனிதே முடிவுற்றதாக எண்ணும் கலவிங்ககன் இதே முறையை மல்லிகாவிடமும் பின்பற்றப் போவதாகத் தீர்மானிக்கிறான். அப்போதுதான் மல்லிகா சம்பரகனின் பக்கம் திரும்புவாள் என்றும் நம்புகிறான். தான் புறப்படுவதாகக் கூறி அங்கிருந்து நழுவுகிறான்.

பின்னர், ரமயந்திகாவைக் காப்பாற்றிய கலகண்டன் நுழைகிறான். அவன் மிகுந்த மகிழ்ச்சி யுடன் காணப்படுகிறான். மாருதனின் நிலையைக் கண்டு, பிரமரகனிடம் நடந்ததை அறிந்து, அவனைத் தேற்றுகிறான். சம்பரகனின் சூழ்ச்சியை மாருதனுக்குப் புரிய வைக்கிறான். மல்லிகா மறைந்திருக்கும் இடத்துக்குச் செல்லும் இருவரும், வழியில்,

மல்லிகாவின் தலையிலிருந்து கழன்று விழுந்திருக்கும் சூடாமணியைக் கண்டு அதனை எடுத்துக்கொண்டு மல்லிகாவைக் காணச் செல்கின்றனர். அங்கு அவள் மயங்கிக் கிடக்கிறாள். அவளைத் தன் மடியில் கிடத்தித் தேற்றி மயக்கத்தினின்று மீட்கிறான் மாருதன். ரமயந்திகாவின் உடன்பிறப்பாகிய ருத்திரராதன், சம்பரகனின் சூழ்ச்சிக்கு உதவியிருக்கிறான் என்று அவர்கள் தீர்மானம் செய்கின்றனர்.

இதனிடையே மாருதனைச் சேர்ந்தவர்கள் யானைச் சம்பவத்தைக் கேள்வியுற்று அவனைத் தேடுகின்றனர். பிரமரகன் வாயிலாக, தான் நலமாக இருப்பதாகக் கூறியனுப்புகிறான் மாருதன். மல்லிகாவின் தாயும் மல்லிகாவைக் காண விழைவதாக வாயிற்காக்கும் பெண் கூறுகிறாள். பிரியப்போவதை எண்ணி மல்லிகாவும் மாருதனும் மிகுந்த துயரத்தை அடைகிறார்கள். மாருதன், தான் வழியில் கண்டெடுத்த சூடாமணியை அவளிடம் கொடுத்துவிடுகிறான். மல்லிகா சென்ற வுடன் கலகண்டன், மாருதனிடம், தான் ஸாரஸிகாவால் ஸோமஸரஸுக்கு அழைத்துச் செல்லப்பட்டதாகவும், அங்கு அவன் ரமயந்திகாவைக் காப்பாற்றியாகவும் கூறுகிறான். சம்பரகன் ருத்ரராதனைத் தனக்குச் சாதகமாக்கிக் கொண்டு இந்தச் செயலில் ஈடுபடுகிறானோ என கலகண்டன் ஐயம் கொள்கிறான். கலகண்டனைத் தேற்றிவிட்டு, இறைவி காத்யாயனியின் ஆசிகளைப் பெற முடிவுசெய்து, மாருதன் தனது இருப்பிடம் திரும்புகிறான்.

### ஐந்தாவது அங்கம்

இடைப்பட்ட காட்சியாகிய சுத்தவிஷ்கம்பத்தில் கட்கஜிஹ்வா என்ற அரக்கன் அந்தண உருக்கொண்டு மேடையில் நுழைகிறான். அவனது தனிமைப்

பேச்சிலிருந்து அவனை அவனது நண்பன் விகடக்ரீவன் அனுப்பியுள்ளான் என்பதை அறியமுடிகிறது. விகடக்ரீவன் சிங்களத்தில் தொலைத்த சூடாமணி, உடலின் மேல்புறம் அணியும் துணி, மேலுலகத்தைச் சார்ந்த ஒரு துகில் என்ற பொருட்களைத் தேடியே கட்கஜிஹ்வா வந்துள்ளான். குசுமபுரத்தில் மேல்துணியை அவன் பார்த்துவிட்டான். அதனை ஒரு நல்ல உடலமைப்பைக்கொண்ட இளைஞன் அணிந்திருந்தான். ஆகவே மற்ற இரு பொருட்களும் இங்குதான் கிடைக்கும் என்று தீர்மானம் செய்கிறான். அவன் இறைவி காத்தியாயனியின் கோயிலுக்குள் நுழையும்போது, அவன் தேடும் மேல்துணியை அணிந்துகோயிலுக்குள் செல்லும் மாருதனைக் காண்கிறான். எல்லாவற்றையும் மணிகூட சிகரத்தில் வசிக்கும் விகடக்ரீவனிடம் தெரிவிக்க, உடனே புறப்பட்டுச் செல்கிறான்.

அங்கத்தின் தொடக்கம் சுத்தவிஷ்கம்பத்தின் தொடர்ச்சியாக அமைகிறது. காத்யாயனி கோயிலுள் நுழையும் மாருதன், இறைவியின் அருளைப் பெறுவது அல்லது உயிரை மாய்த்துக்கொள்வது, என்ற முடிவோடு செல்கிறான். மறுபிறவியிலாவது மல்லிகாவுடன் சேர ஒரு வாய்ப்புக் கிடைக்காதா என்ற எண்ணம் அவனிடம் மேலோங்கியுள்ளது. அங்கு சிவபெருமானை, காத்யாயனி வரவேற்கிறாள். தேவர்கள் அங்கு தெய்வீகத் தம்பதியரை வணங்க வந்திருக்கின்றனர். மாருதன் இறைவியை வணங்கி முடித்துக் கண்களைத் திறக்கிறான். வெறும் இருளை மட்டுமே காண்கிறான். தேவர்கள் இறைவியைத் தொழுதுவிட்டுத் திரும்பி விட்டனரோ என்று எண்ணுகிறான்.

கோயிலுக்குள் நுழைந்து வேண்டிக்கொள்ள நினைக்கிறான் மாருதன். உள்ளே நுழையும்போது கால் தடுக்குகிறது. அங்கேயே நின்று இறைவியைப் போற்றத் தொடங்குகிறான். அவனது தொழுகைக்கு இறைவி யிடமிருந்து பதில் கிடைக்காததால், தனது உடைவாளால் தன் தலையைக் கொய்துகொண்டாவது இறைவியை மகிழ்விப்போம் என்று எண்ணுகிறான். உடைவாளை உருவிக் கழுத்துக்குக்கொண்டு செல்லும் போது விண்ணிலிருந்து மல்லிகாவின் அழுகுரல் கேட்கிறது. வாளை உறையில் போட்டுவிட்டு, விண்ணிலிருந்து கீழே விழும் மல்லிகாவைத் தாங்கிப் பிடித்துக் கொள்கிறேன். மல்லிகாவும் மாருதனும் உரையாடிக்கொண்டிருக்கும்போது, அவளைத் தூக்கிச் சென்ற அரக்கன் அங்கு நுழைந்து மாருதனுடன் போரில் ஈடுபடுகிறான். அவன் மாருதனைத் தூக்கிச் சென்று விடுகிறான். தனது ஞானதிருஷ்டியால் அனைத்தையும் அறிந்துகொள்ளும் மந்தாகினீ அங்கு உடனே வருகிறாள். மல்லிகாவைத் தேற்றி, மாருதன் வீரம் மிகுந்தவன் என்று அறுதியிட்டுக் கூறுகிறாள். அப்போது மாருதன் அந்த அரக்கனைக் கொல்வதை மந்தாகினீ காண்கிறாள். அரக்கனின் உடலினின்று ஒரு விண்ணுலக உருவம் எழுகிறது. அது மாருதனை வணங்குகிறது. அப்போது, படைவீரர்கள் மல்லிகாவைத் தேடியபடி வருகின்றனர். மந்தாகினீ அவளைப் பெற்றோரிடம் செல்லுமாறு கூறிவிட்டுத் தானும் வெளியேறுகிறாள்.

## ஆறாவது அங்கம்

நடுவில் வரும் பிரவேசகம் என்ற காட்சியில், சம்பரகனின் சீடன் சபலகன், தனது ஆசானுடன் ரமயந்திகாவின் இல்லத்தில் தங்கியிருப்பது

காட்டப்படுகிறது. அவன் தனது தனிமைப் பேச்சில், விஷ்ணுராதனின் புதல்வன் ருத்ரராதன் அவனது தங்கை ரமயந்திகாவை கலவிங்ககனுக்கு திருமணம் செய்து வைப்பதாக வாக்குறுதி கொடுத்துள்ளான் என்றும், அதற்கு அவன் தனது தந்தையிடம் கூடஅனுமதி பெறவில்லை என்றும் தற்சமயம் மந்தாகினீக்கு இரண்டு ஜோடி காவித் துணிகளை அன்பளிப்பாக வழங்கப் போகிறான். ஏனெனில் மந்தாகினீ எண்ணினால் ஆதவனுக்கும் அல்லிமலருக்கும்கூட நட்பை ஏற்படுத்த முடியும். வழியில் எதிர்ப்படும் மதுகரிகாவிடம் மந்தாகினீ எங்கு தங்கியுள்ளாள் என வினவுகிறான். மதுகரிகா மந்தாகினீயின் இருப்பிடத் திற்கு வழி காட்டிவிட்டு, மந்தாகினீ முன்னமே கூறியவாறு மல்லிகாவின் திருமணத்துக்கான ஏற்பாடு களைக் கவனிக்கச் செல்கிறாள்.

அங்கம் தொடங்கும்போது மாருதன், கலகண்டன், பிரமரகன் ஆகியோர் தோட்டத்தில் அமர்ந்துள்ளனர். மந்தாகினீயால் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த போதிலும் மாருதன், மல்லிகாவை மணம் முடிப்பது கடினம் என எண்ணுகிறான். தோழர்கள் அவனுக்கு ஊக்கமூட்டு கின்றனர். மல்லிகா தோழிகள் சூழ வந்து சேருகிறாள். மாருதன், அவளை எவ்வாறு அரக்கனிடமிருந்து காப்பாற்ற முடிந்தது என்பதையும், மல்லிகா, அந்த அரக்கன் தேவனாக உரு எடுத்தது குறித்தும் ஒருவருக் கொருவர் கூறிக்கொள்கின்றனர். மல்லிகா, தனது சூடாமணி காணாமல் போய்விட்டது என்று கூறுகிறாள். அதற்கு தோழியர் அது அரக்கன் அவளைத் தூக்கிச் சென்றபோது எங்காவது விழுந்திருக்கக்கூடும் என்று கூறுகின்றனர். திரைக்குப் பின்புறமிருந்து மந்தாகினீ திருமணத்தை முடிக்கும்படி, தோழிகளுக்குக் கட்டளையிடுகிறாள். மல்லிகா தோழிகளிடம்

விடைபெற்று, தோழியை அணைத்துக் கொள்வதாக எண்ணி கண்களில் நீர்புரள மாருதனையே தழுவிக் கொள்கிறாள். அப்போது அங்கு வந்துசேரும் மந்தாகினீ தம்பதிகள் மல்லிகா-மாருதன் இருவரையும் ஆசி கூறி, மணம் முடித்து வைக்கிறாள்.

இருவருக்கும் மந்தாகினீ, இனி நடக்க வேண்டியவைகளைப் பற்றி எடுத்துரைக்கிறாள். மாருதன் அவளது கட்டளைப்படி மாகந்தன் என்பவனை (தேவனாக மாறிய அரக்கன்) மனதால் தியானிக்கிறான். அவன் மல்லிகாவின் உருவத்தில் அங்கு தோன்றுகிறான். சம்பரகனை ஏமாற்றிக் கொல்லவே இந்த ஏற்பாடு. ஸாரஸிகா சம்பரகன் அனுப்பி வைத்த காவித்துணிகளைக் கொண்டு வருகிறாள். மந்தாகினீ அவற்றைக் கலகண்டனிடம் அளித்து, மல்லிகாவின் உருவில் உள்ள மாகந்தனுக்கும், சம்பரகனுக்கும் திருமணத்தைத் தனது உருவில் இருந்து நடத்தி வைக்குமாறு கூறுகிறாள். பிரமரகனை மதுகரிகா வுக்குத் துணையாக அனுப்பி வைக்கிறாள். காளிந்தீ, நவமாலிகா, கலகண்டன் ஆகியோரை மாகந்தனின் வழிகாட்டுதலுக்கேற்ப நடக்குமாறு கட்டளை இடுகிறாள். மல்லிகா-மாருதன், இவ்விருவரையும் திருமணத்தின் பயன்களை நுகருமாறு கூறிவிட்டு, தனது ஆசிரமத்திற்குச் செல்கிறாள்.

**ஏழாவது அங்கம்**

முதலில் காணப்படும் பிரவேசகம் என்ற காட்சியில் நவமாலிகா, மல்லிகாவின் உருவில் இருந்த மாகந்தன் எவ்வாறு சம்பரகனை ஏமாற்றினான் என்று கூறுகிறாள். மந்தாகினியின் உடைகளை அணிந்திருந்த கலகண்டன், ருத்ரராதனைத் தனது கால்களில் வீழ

வைத்ததையும், கூறுகிறாள். ஆனால் இவற்றை அறியாமல் தற்கொலைக்கு முயன்ற ரமயந்திகாவை எவ்வாறோ காளிந்தீ காப்பாற்றினாள் என்ற செய்தியையும் கூறுகிறாள். பிரமரகன் ரமயந்திகாவின் உருவம் தரித்து, கலகண்டனுடன் வருவதைக் காண்கிறாள். மணமகன் உடையிலிருக்கும் கலவிங்ககனை அவன் அறியாவண்ணம் மதுகரிகா பின்தொடர்வதையும் காண்கிறாள். கலவிங்ககனை ஏளனம் செய்ய நவமாலிகாவும் செல்கிறாள்.

அங்கத்தின் தொடக்கத்தில் ரமயந்திகாவின் உருவிலுள்ள பிரமரகன் பொய்க்கோபம் கொள்கிறான். மந்தாகினீ உருவிலுள்ள கலகண்டன், கலவிங்ககனிடம் ரமயந்திகாவின் (பிரமரகன்) காலில் விழுந்து பணிந்தால், அவள் மகிழ்வாள் என்று கூறியவுடன் அவனும் அதையே செய்கிறான். பிரமரகனை கலவிங்ககன் அழைத்துச்செல்கிறான். மதுகரிகா, கலகண்டன், நவமாலிகா இம்மூவரும் தோட்டத்தில் தனியே விடப்பட்ட ரமயந்திகாவைச் சந்திக்க விரைகின்றனர். அங்கு அவள் காளிந்தீயிடம், கலகண்டனிடம் தான் கொண்டுள்ள அன்பை வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறாள். காளிந்தீயும் அவளைக் கலகண்டனிடம் இணைப்பதாக வாக்குறுதி அளிக்கிறாள். கலகண்டன் மந்தாகினீயின் உருவில் வந்துள்ளதை அறிந்த காளிந்தீ, அங்கிருந்து நழுவுவது போல் நடிக்கிறாள். ரமயந்திகா கலகண்டனின் கால்களில் விழுந்து மன்னிப்புக் கேட்கிறாள். கலகண்டன் தன்னை இன்னார் என்று காட்டிக்கொண்ட பின்னர் ரமயந்திகா, மிக்க மகிழ்ச்சியடைகிறாள்.

திரைக்குப் பின்னால் இருந்து, மாகந்தன் சம்பரகனை அழிக்கும் பேரொலி கேட்கிறது.

கலவிங்ககனும் பிரமரகனால் தண்டிக்கப்பட்டுத் தப்பி ஓடுகிறான். பிரமரகன் மேடையில் தோன்றி, எவ்வாறு கலவிங்ககன் விரட்டப்பட்டான் என்று விளக்குகிறான். திரைக்குப்பின்னாலிருந்து, சம்பரகன் தமால மரத்தில் தலைகீழாகக் கட்டப்பட்டுள்ளதாகவும், விஷ்ணுராதனின் இல்லம் முழுவதும் குழப்பம் நிலவுவதாகவும் கூறப்படுகிறது.

இளங்காலைப்பொழுது. எல்லோரும் ஆசிரமத்திற்குச் செல்கின்றனர்.

**எட்டாவது அங்கம்**

அங்கத்தின் தொடக்கத்தில் காணப்படும் இடைப்பட்ட காட்சியாகிய சுத்தவிஷ்கம்பத்தில், சம்பரகனைத் தமால மரத்தில் தலைகீழாகத் தொங்கவிட்டு, தான் மறைந்தது எவ்வாறு என்பதை மந்தாகினீக்கு மாகந்தன் விளக்குகிறான். மாருதனும் மல்லிகாவும் கொடிவீட்டில் இருப்பதாக மந்தாகினீ கூறுகிறாள். வித்யாதர அமைச்சரான விசுவாவசுவிடம் நிகழ்ந்ததைக்கூற, மாகந்தன் விரைகிறான். காணாமல் போன சூடாமணியை எவ்வாறு கண்டுபிடிப்பது என்று மந்தாகினீ கவலையுறுகிறாள். ஆகாயத்திலிருந்து எழும் அசரீரி வாக்கு, அந்த மணி கட்ஜிஹ்வா என்ற விகடக்ரீவனின் நண்பனால் எடுத்துச் செல்லப்பட்டது என்றும் இறைவி காஞ்சி காமாட்சி தேவியின் கிங்கரன் ஒருவன் அவனைக் கொன்று அதனை மீட்டுவிட்டான் என்றும் கூறுகிறது. தனது மந்திர தந்திர வித்தைகளை வெளிக்காட்ட இதுவே தகுந்த நேரம் என்று தீர்மானிக்கும் மந்தாகினீ, சாபத்தால் மயங்கிக் கிடக்கும் மல்லிகாவைக் காஞ்சிக்கே எடுத்துச் செல்ல முடிவு செய்கிறாள்.

அங்கத்தின் முறையான தொடக்கத்தில் மாருதன் மல்லிகாவுக்காக கொடிவீட்டில் காத்திருக்கிறான். ஸாரஸிகா, மல்லிகாவை அழைத்து வருகிறாள். மாருதன் மல்லிகாவை வருணிக்கிறான். வெட்கத்தால் செய்வதறியாது திகைத்து நிற்கும் மல்லிகாவை ஸாரஸிகா மாருதனுடன் கொடிவீட்டிற்குள் அனுப்பி வைக்கிறாள்.

அப்போது கலகண்டனும் பிரமரகனும் ரமயந்திகா, நவமாலிகா, காளிந்தீ ஆகியோர் பின்தொடர, அங்கு வருகின்றனர். மாருதனைத் தேடிவரும் அவர்களிடம் ஸாரஸிகா நடந்ததை உரைக்கிறாள். பேரொலி ஒன்று கேட்கிறது. தொடர்ந்து, மாருதன் அலறும் ஒலி கேட்கிறது. எல்லோரும் குழம்பி நிற்கிறார்கள். கொடிவீட்டினின்று வெளியேறிய மாருதன், மல்லிகா மூர்ச்சையடைந்தபோது மாயமாக மறைந்துவிட்டாள் என்று கூறிக் கதறுகிறான். நடக்கப்போவதைப் பற்றி மந்தாகினீயால் முன்னமே அறிவிக்கப்பட்ட ஸாரஸிகா, எல்லோரும் மந்தாகினீயைச் சென்று காண்போம், என்று கூறுகிறாள். அவர்களும் அவ்வாறே செய்கின்றனர்.

**ஒன்பதாவது அங்கம்**

இடையில் வரும் காட்சியான பிரவேசகம். ஸாரஸிகா தனிமையில் இருக்கிறாள். அவள், மந்தாகினீ, மல்லிகாவை எடுத்துக்கொண்டு காஞ்சிக்குச் சென்று இறைவி காமாட்சி தேவியின் அருளால் சூடாமணியைத் திரும்பப் பெற்றாள் என்றும், மாருதன் ஸாரஸிகாவின் ஆறுதல் சொற்களுக்கு இணங்காமல் கலகண்டனுடன் மணிகூட மலையின் தாழ்வாரங்களில் அலைந்து கொண்டிருக்கிறான் என்றும், நவமாலிகா

முதலானவர்களும் மல்லிகாவை தேடி அலைந்து கொண்டிருக்கின்றனர் என்றும், இவற்றை செவியுற்ற மந்தாகினீ, மல்லிகாவை எடுத்துக்கொண்டு மணிகூட மலைக்கே சென்றுவிட்டாள் என்றும், மழைக்காலம் நெருங்கிவிட்டதால், மல்லிகாவின் பிரிவாற்றாமை அதிகரித்துவிடலாம் என்றும் கூறுகிறாள்.

அங்கத்தின் முறையான தொடக்கத்தில், மாருதன் மணிகூட மலையின் தாழ்வாரங்களில் அலைவதாகக் காட்டப்படுகிறான். கலகண்டன் அவனுக்கு ஆறுதல் கூறுகிறான். இருப்பினும் மாருதன் மனதை மாற்ற இயலவில்லை. மரம், செடி, கொடி, கல், பறவைகள், விலங்கினங்கள் என்று ஒன்றையும் விட்டுவைக்காமல் மாருதன் ஒவ்வொன்றிலும் மல்லிகாவின் ஒவ்வொரு தன்மையைப் பார்க்கிறான். அவைகளை அணுகி, மல்லிகாவைப் பார்த்தீர்களா என வினவுகிறான். மாருதன் மயங்கி விழுகிறான். எல்லாத் தெய்வங் களையும் உதவிக்கு அழைக்கும் கலகண்டனும் ஒரு கட்டத்தில் மயங்கி விழுகிறான்.

இதனிடையே மல்லிகாவைத் தேடிவரும் நவமாலிகா, ரமயந்திகா, காளிந்தீ முதலானோர் அவளைக் கண்டுபிடிக்க முடியாமல் மாருதனையாவது காண்போம் என முடிவு செய்து, தேடிக் கொண்டு வருகின்றனர் அவர்கள் முதலில் கலகண்டன் மயங்கிக் கிடப்பதைக் காண்கின்றனர். ரமயந்திகா அவனை மடியில் கிடத்திக் கொள்கிறாள். கலகண்டன் மூர்ச்சை தெளிகிறான். மாருதன் இன்னும் மூர்ச்சை தெளியாததால், கலகண்டன் மற்றவர்களோடு தற்கொலை செய்துகொள்ள முடிவெடுக்கிறான். நவமாலிகா முதலில் மலையுச்சியினின்று குதிக்க முயலும்போது, மல்லிகா காணாமல் போனபோது

எப்படிப்பட்ட பேரொலி ஏற்பட்டதோ, அப்படிப்பட்ட பேரொலி எழுகிறது. மல்லிகா சூடாமணியை அணிந்தவளாக அங்கு தோன்றுகிறாள். மாருதனின் நிலைகண்டு, அவனைத் தன் மடிமீது கிடத்திக் கொள்கிறாள். உடனே அவனது மூர்ச்சை தெளிகிறது. மந்தாகினீ தன்னை காஞ்சிக்கு எடுத்துச் சென்று விட்டு வந்தாள் என்ற செய்தியை அறிவிக்கிறாள் மல்லிகா. மந்தாகினீயும் வந்துவிடுகிறாள். மாருதன் அவளிடம் எல்லாவற்றையும் உள்ளது உள்ளபடி விளக்குமாறு கேட்டுக்கொள்கிறான். மந்தாகினீயும் அதற்கு ஒப்புக் கொள்கிறாள். ஆனால் மல்லிகாவைத் தேடிக் கொண்டிருக்கும் விசுவாவசு முதலானவர்களுக்கு ஆறுதல் தர வேண்டும் என்று கூறிவிட்டு, யாவரும் பின்தொடர மந்தாகினீ மேடையைவிட்டு அகலுகிறாள்.

**பத்தாவது அங்கம்**

சுத்தவிஷ்கம்பம் என்னும் காட்சியில் கட்டியம் கூறுபவன், மாருதனின் இல்லம் விழாக்கோலம் பூண்டிருப்பதாகக் கூறுகிறான். அந்த இல்லத்தில் இருப்போர் யாவரும் தெய்வீகமான ஒரு இரகசியத்தை மந்தாகினீயின் வாயிலாகக் கேட்க ஆவலுடன் இருக்கிறார்கள் என்றும் கூறுகிறான்.

அங்கம் தொடங்குகிறது. மந்தாகினீ கதை சொல்லத் துவங்குகிறாள்.

முன்னொரு காலத்தில் காற்றுக்கடவுள் ஒரு அழகான உருக்கொண்டு உலகைச் சுற்றிவந்தார். அப்போது நாக நாட்டின் மந்திரியான மணிதரனின் பெண் மஞ்சுளாவைக் கண்டார். இருவரும் மனதால் மணம் புரிந்துகொண்டனர். அவர்களுக்கு ஒரு மகன் பிறந்தான். தந்தை மீது இருந்த அச்சத்தின் காரணமாகக்

குழந்தையைக் காட்டிலேயே விட்டுவிட்டு நாகலோகத்தை அடைந்தாள் மஞ்சுளா. அகத்திய முனிவரின் சீடர் ஒருவர் அக்குழந்தையை எடுத்து வளர்த்தார். அக்குழந்தைக்கு மாருதகுமாரன் எனப் பெயர் சூட்டினார். அவன் இளைஞனானான். தனது கனவில் ஒரு கன்னியைக் கண்டான். அதனைத் தனது நண்பர்களுக்கு உரைக்கும்போது வானில் வடக்கி லிருந்து பறந்து சென்ற அன்னப்பறவை ஒரு கழுத்தில் அணியும் ஆரத்தை அவன் மடிமீது போட்டது. அந்த ஆரம் அவன் கனவில் கண்ட பெண்ணின் ஆரத்தை ஒத்திருந்தது. அவன் தன்னை வளர்த்த முனிவரிடம் கூட அனுமதி பெறாமல், நண்பர்களுடன் அப்பெண்ணைத் தேடிப் புறப்பட்டான். இமாலயத்தை வந்தடைந்தான். அங்கிருந்த கற்பக மரம் அவனுக்கு ஒரு வாடா மாலையை வழங்கியது. கங்கைக் கரையில் அமைந்துள்ள இறைவி காத்தியாயனியின் கோயிலில் அவன் ஒரு பெண் துறவியைச் சந்தித்தான். அவளிடம் அந்த கழுத்தாரத்தைக் காண்பித்து, தான் அதை அணிந்த பெண்ணைக் காண வந்திருப்பதாகக் கூறினான். பெண் துறவியும், அந்த ஆரம் வித்யாதரர்களின் அமைச்சர் விசுவாவசுவின் மகளுடையது என்று தெரிவித்தாள். மேலும், அவனைப் பற்றிய செய்திகள் அனைத்தும் மலயமலைக்குச் சென்றுவரும் வித்யாதரர்கள் மூலமாகத் தனக்குத் தெரியும் என்று கூறினாள். பிறகு பெண் துறவி அவனை அந்தப் பெண்ணிடம் அழைத்துச் சென்றாள். ஆரத்தை அளித்த அவனிடம் அவள் அவன் அணிந்துள்ள மாலையை விரும்பிக் கேட்டாள். அப்போது அவளது தந்தை அவளை அழைக்கவே, அவள் சென்றுவிட்டாள். இருவரும் ஒருவரை ஒருவர் விரும்பத்தொடங்கினர்.

பின்னர் தனது நண்பர்களுடன் இணைந்த மாருதகுமாரன் ஒரு பலகையில் அவளை ஓவியமாகத்

தீட்டினான். அப்போது விளையாடுவதற்காகக் கட்டப்பட்ட மலைமீதிருந்து ஒரு பெண் அலறும் ஒலி கேட்டது. அங்கு விரைந்த மாருதகுமாரன் தான் சந்தித்த வித்யாதரப்பெண் தூக்கிட்டுத் தற்கொலைக்கு முயல்வதைக் கண்ணுற்று, அவளை விடுவிக்கச் சென்றான். அப்போது அவன் கையிலிருந்த ஓவியம் வரையப்பட்ட பலகை நழுவி, அந்த மலையின் தாழ்வாரத்தில் தவமியற்றிக் கொண்டிருந்த, "சுலபமன்யு" என்ற முனிவர் மீது விழுந்தது. காதலினால் கண்மூடித்தனமாக நடந்துகொண்ட மாருதகுமாரனயும் வித்யாதரப் பெண்ணையும் அவர் மனிதர்களாகப் பிறக்கும்படி சபித்தார். அவர்கள் முதலாவதாக ஒன்று சேரும்போது இருவரும் மூர்ச்சையடைவர் என்றும் சபித்தார். மாருதகுமாரனின் ஒரு தோழன் அவனது பிரிவைத் தாங்காமல் மலைமீதிருந்து குதித்து உயிரை விட்டான்.

மற்றொருவன் மாருதகுமாரனாலும் வித்யாதரப் பெண்ணாலும் அங்கு விடப்பட்ட சூடாமணி, ஓவியம், மேலே உடுத்திக்கொள்ளும் துகில் ஆகியவற்றை எடுத்துக்கொண்டு, முனிவரை பலவிதமாக ஏசினான். மிகுந்த சினம்கொண்ட முனிவர் அவனை அரக்கனாகவும், நண்பனுக்கு எதிரியாகவும் பிறக்கும்படி சபித்தார்.

இவைகளைத் தனது ஞானதிருஷ்டியின் மூலம் அறிந்த அந்தப் பெண் துறவி அங்கு வந்தாள். இறைவி கௌரி அந்தச் சாபத்தை மாற்றியமைத்த அசரீரியையும் கேட்டாள். மூர்ச்சையடைந்த இருவரும், சூடாமணியைத் தொடுவதன் மூலம் மீண்டும் சுயநினைவடைவார்கள். மலை மீதிருந்து விழுந்த நண்பன் மாருதகுமாரனின் மறுபிறப்பிலும்

நண்பனாவான். எதிரியாகப்போகும் நண்பன், மாருதகுமாரனால் கொல்லப்பட்டு, மீண்டும் நண்பனாவான் என்று அந்த ஒலி கூறியது.

மந்தாகினீ இதுவரை கதையாகக் கூறிவிட்டு, கதையில் வரும் மாருதகுமாரன், மாருதன் என்றும், வித்யாதரப்பெண் மல்லிகா என்றும், நண்பன் கலகண்டன் என்றும், அரக்கனாகத் தோன்றி மீண்டும் நண்பனானவன் மாகந்தன் என்றும், அடையாளம் காட்டுகிறாள். மல்லிகாவைத் தவிர மந்தாகினீ உள்ளிட்ட அனைவரும் உடனே மூர்ச்சை யடைகிறார்கள். மல்லிகா மாருதனை அணைத்துக் கொள்கிறாள். அவள் அணிந்துள்ள சூடாமணியின் தன்மையால் மாருதன் மூர்ச்சை தெளிகிறான். கலகண்டனை ரமயந்திகா மூர்ச்சை தெளிவிக்கிறாள். மந்தாகினீ எழுந்து எல்லோரும் சாபத்திலிருந்து விடுபட்டுவிட்டதாக அறிவிக்கிறாள். வித்யாதர அமைச்சர் விசுவாவசுவை மாகந்தன் அழைத்து வருகிறான். அரசன் சந்திரவர்மன் மல்லிகாவின் திருமணத்தை ஏற்றுக்கொண்டதாக, கலகண்டன் செய்தி கொண்டுவருகிறான். எல்லோரும் மகிழ்ச்சியில் திளைக்கின்றனர்.



# CRITICAL APPARATUS

The present edition of Mallika° is based on the following manuscripts and printed books.

$म_1$ is deposed in the Govt. Oriental Manuscripts Library, Madras with Sl. No. R. 6623. The material is palmleaf and the script is Grantha. The work is complete in 97 folios of size 49 x 3.2 $cm^2$ with7 to 8 lins per page. The condition is old and injured. The library gives the information that the manuscript has been purchased from one Chakravarthi Jagannathachariar of Kumbakonam.

$म_2$ is deposed in the Govt. Oriental Manuscripts Library, Madras with Sl. No. D. 12500. The material is palm-leaf and it is written in the Malayalam script. The Work is incomplete and breaks off abruptly in the VIII Act with 102 folios of size 35 x 5.6 $c.m.^2$ I has 13 lines per page. The condition of the manuscript is old and injured.

$त_1$ is deposed in the Tanjore Maharaja Serfoji's Sarasvati Mahal Library, Thanjavur, bearing the manuscript No. TD 4542, corresponding to Burnell No. 10674. The meteral is palm-leaf and is written in the Grantha script. With 6 to 11 lines per page the manuscript is complete in 79 folios of size 41 x 3.2 $cm^2$ each. The manuscript is in a decaying condition. The leaves are brittle and not in order.

$त_2$ is also deposited in the same Library. The material is palm-leaf and the work is written in the Telugu script. It bears the No. TD 4541, corresponding to Burnell No. 10673. It has 101 folios of size 45.5 x 3.5 $cm^2$ with about 6 lines per page. The condition of the manuscript is old.

$अ_1$ is the manuscript deposied at the Adyar Library and Research Centre, Madras, bearing Sl. No. D. V. 1440. The

manuscript number is 68486. The material is palm-leaf with 197 folios of size 23. 5 x 4 $cm^2$ and the work is written in Malayalam in 7 lines per page . The condition of the manuscript is old, worm-eaten and injured. In addition to the present work, the bundle contains the Prakrtasutras of Valmiki.

मै$_1$ is deposed at the Oriental Research Institute of the Mysore University. The Sl. No. of the manuscript is 27644 and the manuscript No. is p. 7233/1. The material is palm-leaf. In 117 folios of size 39 x 3. 5 $cm^2$ with about 8 lines per page, the work is writen in the Grantha script. The condition of the manuscript is old. It has at the end the Samskrtacchaya for some Prakrta words.

मै$_2$ is deposited at the same place. The Serial no. of the manuscript is E. 27654 and the manuscript No. is P. 7274/2. The work is complete with 116 folios of size 38. 5 x 3.8 $cm^2$. Written in the Grantha script and the manuscript is old.

मै$_3$ is also deposited at the same place. The Serial no. of the manuscript is 27647 and the manuscript No. is C. 373. The material is paper and the script is Telugu (as against the entry as Kanarese in the Catalogue). It has 57 folios of size 30 x 13.5 $cm^2$ with 12lines per page. The work is incomplete and breaks off at the close of the VI Act. The condition of the manuscript is old and damaged.

मै$_4$ is deposited at the Maharaja's Sanskrit College Mysore. The manuscript No. is 355. Made up of palm-leaf with 93 folios of size 39 x 3.5 $cm^2$ , the work is written in the Grantha script with about 8 lines per page. The condition is fairly old. It contains the Prabodhacandrodaya in the same bundle.

के$_1$ is deposited in the Oriental Research Institute of Kerala University. The serial no is 12613 and the manuscript no. is 1215. The material is palm-leaf. In 146 folios of size 27 x 4 $cm^2$ with about 7 lines per page. Written in the Malayalam script, the work is complete. The condition is old.

के$_2$ also is deposited in the Oriental Research Institute of Kerala University. The serial no. i 12615 and the manuscript no. is 619. It is written in the Malayalam script. It contains 133 folios of size 31 x 4 cm$^2$ with 7 lines per page. The work is complete. The condition of the manuscript is old.

The following are the manuscript giving **Samskrtacchaya** for the **Prakrt** passages in the work.

अ$_2$ is deposited in the Adyar Library and Research Centre, Madras catalogued under serial no. D. V. 1441. The material is palm-leaf. The script is Grantha. It contains 29 folios of size 41 x 3. 2 cm$^2$ of 9 lines per page. It is complete. The Adyar Descriptive Catalogue states that the manuscript breaks off abruptly in X Act, but does not state that it is only a manuscript of the Chaya for the **Prakrt** passages in the **prakarana.**

के$_3$, के$_4$ and के$_5$ are the palm-leaf manuscripts deposited at the Oriental Research Institute of the Kerala University. They are in Malayalam script. के$_3$ bears the serial no. 12617 with manuscript no. 1030 B. It has 31 folios of size 29 x cm$^2$ 4.5cm$^2$ with 8 lines per page and is good in condition.

के$_4$ has the manuscript no. 18330. In 75 folios of size 17 x 4.5 cm$^2$. the work is complete. It is stated by he Library authorities that the manuscript has been procured from Shri Devan Namboothiri of Harippad.

के$_5$ has the serial no. 12618 and manuscript no. 10591 A The Chaya is complete in 23 fplios of size 36 x 4.5 cm$^2$. In addition at the beginning, the author gives his commentary on verse of I Act and states that he is going to give later only the **Chaya** for the **Prakrt** passages.

**Editions :**

1. Mallikamaruta with C. Parimala of Jagannatha, Ed. Jivananda Vidyasagarabhattacarya, Saraswati Press, Calcutta, 1878.
2. Mallikamaruta, with C. Padavirti, of Tirumala Tatacarya, Vidyatarangini Press, Mysore, 1896.

## STEMMA CODICUM

Before arriving at the Ur-text, from the available printed and manuscript materails, we have to discuss the following details, observed from these, while editing the text.

म$_1$ has two important omissions when compared with the text of मु$_1$. They are, the description about the learned audience assembled to witness the play and the introductory portion of Act X. But we find the commentator Jagannatha of म$_1$ quoting variants from some other manuscript. म$_1$ has several printing mistakes and it has not provided Chaya for all the Prakrt passages. Moreover, to make Dandin the author of the drama, the editor changes some of thepassages in the first Act, which are not tobe found anywhere in the available manuscripts. The commentator also, on his part, supports the editor, by fixing his patron as Vikrama, the legendary Kng of Ujjain[1]. The edition has some of theverses not observing the padakrama.

म$_2$ which provides a commentary and also Samskrtacchaya for the Prakrt in the play, has indeed consulted another manuscript, which is evident from the variants he gives in his commentary. The text has much resemblance with त$_2$ and के$_2$. अ$_1$ and म$_2$ too give more or less similar readings.

1. (i) See C. on page 14 of मु$_1$ while explaining the word - मीमांसकचक्रवर्तिना महर्षिपुत्रेण परमेश्वरेण and p. 66. मु$_1$. इति श्रीमत्कवितिलक etc..

   (ii) Also see p. 12 of म$_1$ - इरुगुपनाथापरपर्यायो दण्डिकविर्मम ।म$_1$

Of the Mysore manuscripts , $मै_{1-4}$, $मै_3$ which is a paper transcript, is incomplete. $मै_4$ is deposited in the Maharaja's Sanskrit College, Mysore. Probably, this must be the text followed by the editor of $मु_2$, since he was the court-poet of H.H Maharaja Krishnaraja Wadiyar[1].

$त_2$ might have been the transcript of $म_1$ or $त_1$. $त_1$ is very much damaged. Therefore, it was not possible for the present editor to record the important variants. $म_2$ might be an addition to the Library, from the family of के series, since the script is the same.

While scrutinising the manuscripts in the Kerala University, five manuscripts of the text and seven manuscripts of the Chaya have been found. Among the five containing the text, four are incomplete. Apart from the one which is complete ( $के_1$) one manuscript ( $के_2$ ) has been selected from the incomplete because it has 2800 granthas though it is very much damaged. T. 744 which is a devanagari paper manuscript (Chaya) could not be consulted. Among the others Nos 1030 B ( $के_3$), 18330 ( $के_4$) and 10591 A ($के_5$) only have been selected for comparison.

The general trend of the manuscripts written in Malayalam script is that the work starts with Harisriganapataye namah. at the beginning gives the following remark about the manuscript - मल्लिकामारुतम् । स उद्दण्डकविकृतं पूर्वभागस्समीचीनः । उत्तर-भागश्शिथिलः। पूटानि 184 मलिपङ्क्तिय 13 । This remark might have been added by somebody who came across the

---

1. $मु_2$ - श्री महीशूरपुरीमध्यविद्योतमानदिव्यरत्नसिंहासनारूढश्री कृष्णराजेन्द्रास्थानपण्डितनल्लूरुसञ्जयाचार्यतनूजतिरुमल-ताताचार्यरचितपदविवृत्याख्यटीकासहितम् ।

manuscript. When the later half had become brittle. $मै_4$ starts with श्रीहयग्रीवाय नमः । श्री नृसिंहपरभ्रह्मणे नमः । $मै_1$ has the reading omitted by $मु_1$ (see pp 2-3, Act I) inserted by some old manuscript leaf. Also we find in the II Act, the reading omitted by added on the side of $मै_1$ (see p. 84, Act II, fn. 1).

The colophon of $म_1$ reads श्रीमते वेदान्तदेशिकाय नमः । श्रीमते तातदेशिकाय नमः and the title has been read as मल्लिकानन्दम् ।

$त_2$ has the following colophon.

याद्दशं पुस्तकं द्दष्ट्वा ताद्दशं लिखितं मया ।
अबद्धं वा सुबद्धं वा मम द्दोषो न विद्यते ।

श्री सरस्वत्यै नमः । श्री साम्बशिवार्पणमस्तु । लेखकपाटकयोः शुभं भं भवतु ।

Last Leaf :

प्रकरणतिलकं नाटकं तेलुगुलिपिनि अङ्कालु पदि आकुलु । 109 पुस्तकं तिसशि लेटु ।12 तेदि सम्पूर्ण ग्रन्थः ।रामाभाट्लु। राशिनाडु।

From this, we understand that $त_2$ is only a copied manuscript.

$त_1$ has the following end.

मङ्गलं भगवान् विष्णुः मङ्गलं मकरध्वजः ।
मङ्गलं पुण्डरीकाक्षो मङ्गलं मधुसूदनः ॥

सरस्वत्यै नमः । श्री गणाधिपतये नमः । श्रीकामाक्ष्यै नमः । श्री गुरुभ्यो नमः ।

$के_2$ states that the manuscript has been written by Sekhara and has been kept at Kudallur house[1]. Therefore the manuscript must have originated in Kerala. The Chaya manuscripts taken

